ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்







# ஸ்ரீ மணவாள மாமுனிகள் வைபவம்

வித்வான், ந்யாய சிரோமணி, சொல்வேந்தர், யதீந்த்ரப்ரவணப் ப்ரபாவம் பிள்ளைலோகம்

ஸ்ரீ உ. வே. ஸ்தலசயனத் துறைவார் ஸ்வாமி



ஸ்ரீ மணவாளமாமுனிகளின் 624-வது திரு அவதார திவ்யதின

(ஸ்ரீமுக ௵ ஐப்பசி ௴ 4௳ புதவாரம்

திருமூலம் 20-10-1998 இலவச வெளியீடு)

ஸர்வே ஜநாஸ் ஸுகிநோ பவந்து

The Little Flower Co., Madras - 600 017

LIFCO Associates, Madras - 600 017

FOR FAVOUR OF CIRCULATION

(PLEASE ACKNOWLEDGE RECEIPT)

விலை ரூ. 2-00

ஸ்ரீ:



# ஸ்ரீ மணவாளமாமுனிகள் வைபவம்

ஐப்பசித் திருமூலம் : பூலோக வைகுண்டமாகிய திருவரங்கமும், அரங்கன் திருமுற்றத்தே வாழும் அடியார்களும், பிரபன்ன ஜன கூடஸ்தரான நம்மாழ்வார் அருளிய தண்டமிழ் நூல்களும் தேனும் பாலும் கன்னலும் அமுதுமாகிய அவரது அருளிச்செயல்களை அநுபவித்து வரும் கடல் சூழ்ந்த இம்மண்ணுலகும் வாழ ஸாதாரண ஆண்டு ஐப்பசித் திருமூலத்தில் அவதரித்தார் நம் மணவாளமாமுனிகள். ‘சென்றால் குடையாம் இருந்தால் சிங்காசனமாம்’ என்ற முறையில் நொடிப் பொழுதும் பிரியாமல் பகவானுக்கு வழுவிலா அடிமை செய்து கைங்கர்யஸ்ரீயுடன் விளங்கும் திருவனந்தாழ்வானாகிய ஆதிசேஷனே மணவாளமாமுனிகள். ஸ்ரீராமாநுஜரும் ஆதிசேஷாவதாரம். அவருடைய அபராவதாரம் மணவாளமாமுனிகள். இவர் ஸாதாரண வருஷத்தில் தோன்றினாலும் அஸாதாரணமான கீர்த்தியுடன் விளங்கினார். ஆழ்வார்கள் அவதரித்த நாள் ஒவ்வொன்றும் நல்லவர்கள் கொண்டாடும் நாள்; நான்மறையோர் கொண்டாடும் நாள் என்று போற்றப்பட்டாலும் அழகு திகழ்ந்திடும் ஐப்பசித் திருமூலம் என்று அம்புவியோர் (அனைவரும்) கொண்டாடும் நாள் மணவாளமாமுனிகள் அவதரித்த நன்னாள். உலகத்தை வாழவைக்க வந்தவதரித்த ...ாமாமுனிகளின் திருநக்ஷத்திர நன்னாள் ஜகதப்யுதயைக ...ன்று ஒருமுகமாகப் போற்றப்படுகிறது.

ஐப்பசித் திங்கள் :—இதற்கு ஐப்பசி மாதம் என்று பொருள் ...ண்டாலும், ஐப்பசி மாதத்திய (ஐப்பசி மாதத்தில் உதித்த) ...ன் என்றும் கூறலாம். ஸ்ரீராமாநுஜரை சூரியனாகவும், ...ளமாமுனிகளைச் சந்திரனாகவும் கூறலாம். சந்திரன்

குளிர்ந்திருப்பான். எல்லோராலும் விரும்பப்படுகிறான். மணவாள மாமுனிகள் பொறுமையே வடிவாக அமைந்தவர். குளிர்ந்த திருவுள்ளம், குளிர்ந்த கடாக்ஷம்; மனம் குளிரும் வார்த்தைகள். இவர் அவதரித்த மாதமும் மழைக்காலம்; எங்கும் தண்ணீர் நிறைந்து குளிர்ந்து சுபிக்ஷத்திற்கு அடிப்படையான காலம்! ராமனுடைய அவதாரத்தினாலும், ராமாநுஜருடைய அவதாரத்தினாலும், சித்திரைமாதம் சிறப்படைந்ததுபோல், மணவாளமாமுனிகளின் திரு அவதாரத்தினால் ஐப்பசி மாதம் சிறப்படைந்தது. ராமாநுஜரே மணவாளமாமுனிகள் என்பதற்கு இப்போதும் ஓர் ஆச்சரியமான நிகழ்ச்சியைக் காணலாம். ஒவ்வோராண்டும் ஐப்பசி மாதத்தில் எந்தத் தேதியில் மணவாள மாமுனிகளின் திருநக்ஷத்திரமாகிய திருமூல நன்னாள் வருகிறதோ, அடுத்த சித்திரை மாதத்தில் அதே தேதியில் ராமாநுஜருடைய அவதார நக்ஷத்திரமாகிய சித்திரைத் திருவாதிரை நன்னாள் வரும். இந்த அதிசயம் வேறு எங்கும் காண இயலாது. மணவாளமாமுனிகள் உத்ஸவம் வந்தால் மழையும் உடன் வரும். ஒன்றும் அறியாத பாமரமக்கள்கூட மணவாள மாமுனிகள் உத்ஸவத்தை 'மழைச்சாமி உத்ஸவம்' என்று கௌரவிப்பதைக் காணலாம்.

விசதவாக்சிகாமணிகள்: —"சதேஷு ஜாயதே சூர: வக்தா சதஸஹஸ்ரச:" என்று கூறுவார்கள். நூறில் ஒருவன் தான் சூரனாக விளங்குவான்! லக்ஷத்தில் ஒருவன்தான் நன்கு பேசவல்லவனாக இருப்பான். கூறியதையே திரும்பக்கூறல், மருளும் மயக்கமும் ஏற்படும்படி சொல்லுதல், மிகவும் கஷ்டப்பட்டுப் பொருள் அறிந்து கொள்ளும்படி சொல்லுதல், இன்ன கூறினான் என்று தொகுத்து அறிந்து கொள்ள முடியாதபடி பேசுதல், பிறர் மனம் புண்படுமாறு பேசுதல், வீண் பேச்சுக்களைப் பேசுதல், முன்பின் முரண்படுமாறு பேசுதல் முதலிய சொற்குற்றங்கள் மாமுனிகளின் திருவாக்கினில் திவ்ய ஸ்ரீ ஸூக்திகளில் காண இயலாது. இவருக்கு 'விசதவாக்சிகாமணிகள்' என்ற விருது சிறப்பாகக் கூறப்படுகிறது. கேட்டவர்களின் மனத்தை ஈர்ப்பதாகவும், கேளாதவர்களுக்கு, கேட்கவேண்டும் என்று ஆசையை ஏற்படுத்துவதாகவும் சொல்லும் சொல் அமைய வேண்டும். மணவாளமாமுனிகளின் திருவாக்கு இனிமையாகவும், எளிமையாகவும், சந்தேஹங்களை நீக்கித் தெளிவான ஞானத்தை

அளிப்பதாகவும் இருக்கும். அதனாலன்றோ தென் திருவரங்கம் கோயில் கொண்ட நம் பெருமாள் மணவாளமாமுனிகளை ஆசாரிய ராகக் கொள்ள எண்ணினான்! தான் அவருக்குச் சீடனாக இருந்து கொண்டு, திருவாய்மொழியின் சிறந்த வியாக்யானமாகிற ஈடு முப்பத்தாறாயிரப்படியின் அரும் பொருளைக் கேட்க விரும்பினான்.

## ஸ்ரீசைலேச மந்த்ரம் அவதரித்தல்

திருவரங்கன் மணவாளமாமுனிகளை அருளப்பாடு இட்டு அழைத்துத் தன் திருக்கோயிலின் முன்பு எழுந்தருளி இருந்து, திருவாய்மொழி காலக்ஷேபம் ஸாதிக்க நியமித்தான். நம்மாழ்வார் 'வான்திகழும் சோலை மதிளரங்கர் வண்புகழ்மேல் ஆன்ற தமிழா யிரத்தையும்' (ஈடு முப்பத்து ஆறாயிரப்படியின் பொருள்களை) காலக்ஷேபம் சொல்லும் பாக்யத்தை நினைத்து மணவாள மாமுனி களுக்கு மகிழ்ச்சியும் வியப்பும் ஏற்பட்டன.

நாமார்? பெரியதிரு மண்டபம்ஆர்?—நம்பெருமாள்
தாமாக என்னைத் தனித்தழைத்து—நீ மாறன்
செந்தமிழ் வேதத்தின் செம்பொருளை நாளுமிங்கே
வந்துரை என்றேவுவதே ஆய்ந்து.

என்று தன்னை நைச்சியமாக அநுஸந்தித்துக்கொண்டு மறுநாளே தொடங்கி ஓராண்டு காலம் ஈடு காலக்ஷேபம் ஸாதித்தார். திருவரங்கன் தன்னுடைய நித்யோத்ஸவ,பக்ஷோத்ஸவ மஸோத்ஸவ, வர்ஷோத்ஸவாதிகளை எல்லாம் நிறுத்திக்கொண்டு சிஷ்யராக இருந்து பிராட்டியரோடும், அடியார் குழாங்களோடும் காலக்ஷேபம் கேட்டு அருளினான். ராமன், தன்சரித்திரமாகிய ராமாயணத்தைக் குசலவர்கள் வாயிலாக கேட்டு உவந்தான். பகவான் தன் ஸ்வரூப ரூப குணங்களை எல்லாம் ஆழ்வார்களுக்குக் காட்டிக் கொடுத்து அவர்களைப் பாடவைத்து கோயில்களில் அர்ச்சாவதார ரூபத்தில் இருந்துகொண்டு திருச்செவி சாற்றி மகிழ்கிறான். இதுவும் போதாது என்று நம்பெருமாள் மணவாளமாமுனிகளிடம் ஈடு காலக்ஷேபம் கேட்டு பூர்ண திருப்தியை அடைந்தார் என்று

கூறுவது மிகையன்று. ஆனித்திருமூலத்தன்று காலக்ஷேப சாற்று மறை. பெரிய ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டியின் மத்தியில் திருவரங்கன் நான்கு வயது நிரம்பிய குழந்தையாகத் தோன்றி,

ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம் |
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்ய ஜாமாதரம்முநிம் ||

என்று மணவாளமாமுனிகளை நோக்கி அருளிச்செய்து பஹுமானித்து மறைந்தான். இந்த சரித்திரத்தை மணவாள மாமுனிகளால் ஏற்படுத்தப்பட்ட அஷ்டதிக்கஜாசாரியர்களும் தங்களது ஸ்தோத்ரங்களில் கூறியுள்ளார்கள். திருவரங்கனின் கட்டளைப்படி அதுமுதல் எங்கு அருளிச்செயல் தொடங்கினாலும் இதையே தொடக்கத் தனியனாக அனைவரும் ஸேவித்து வருவது வழக்கமாக இருக்கிறது. இந்த ச்லோகம் பகவானின் திருவாக்காக வெளிவந்தபடியால் இது 'ஸ்ரீசைலேச' மந்த்ரமாயிற்று.

ஸமாப்தௌ க்ரந்தஸ்ய
ப்ரதித விவிதோ பாயநசயே
பரம் ஸஜ்ஜீபூதே
வரவரமுநேரங்க்ரி ஸவிதே |

ஹடாத் பால: கச்சித்
குதஇதி நிரஸ்தோப்யுபகத:
ஜகௌ ரங்கே சாக்ய:
பரிணத சதுர்ஹாயந இதம் ||

—ஸ்ரீசைலர்ஷ்டகம் - 5

என்பது வரலாறு. இப்பொழுதும் சில இடங்களில் ஈடு மஹோத்ஸவம் நடைபெறுகிறது. ஆனி மூலத்தில் நிறைவுபெறும் ஈடு சாற்றுமறையை 'ஸ்ரீசைலேச தயாபாத்ரம்' திருவவதார மஹோத்ஸவம் என்று கூறலாம்.

## தெவிட்டாத இன்னமுதம்

மணவாளமாமுனிகள் தமிழில் அருளிச்செய்த பிரபந்தங்கள் உபதேசரத்தினமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி, ஆர்த்திப் பிரபந்தம் முதலியவை. மணவாளமாமுனிகள் தன்னுடைய காலத்தில் பெரும்பாலும் அருளிச்செயல்களுக்கும், பிள்ளை லோகாசாரியர் அருளிய ரஹஸ்யகிரந்தங்களுக்கும் வியாக்யானங் களை அருளிச்செய்தார். நம் பூர்வாசாரியர்கள் அருளிச் செயல்களுக்கு மணிப்ரவாள நடையில் வியாக்யானங்களை இயற்றியுள்ளார்கள். பிள்ளான், நஞ்சீயர், பெரியவாச்சான் பிள்ளை, தென்னாச்சிவடக்குத் திருவீதிப்பிள்ளை, அழகிய மணவாளச்சீயர் ஆகியோர் உரைகளை எழுதி இருந்தாலும், சாஸ்த்ரார்த்தங்களை நிஷ்கர்ஷித்துச் சொல்லுவதற்காகவே தோன்றிய ரஹஸ்ய கிரந்தங்களுக்கு வியாக்யானங்களாக மணவாள மாமுனிகள் எழுதியுள்ள ஸரணியை (நடையை) வேறு யாரும் பின்பற்ற இயலாது. உயர்வே பரன்படியை உள்ளதெல்லாம்தான் கண்டு உயர்வேத நேர்கொண்டு உரைக்கப்பட்ட திருவாய்மொழி நூற்றந்தாதியைப் போல் எந்தப் பிரபந்தமும் பிற்காலத்தில் அவதரிக்கவில்லை. இதற்குத் தனியனை அருளிச்செய்தவர் 'அல்லும் பகலும் அநுபவிப்பார் தங்களுக்குச் சொல்லும் பொருளும் தொகுத்துரைத்தான் நல்ல மணவாள மாமுனிவன்' என்று அருளினார். மாமுனிகளின் திவ்ய ஸூக்திகள் எத்தனை காலம் எத்தனை முறை அநுபவித்தாலும் தெவிட்டாத இன்னமுதமாக இருக்கும்.

## அஷ்டதிக்கஜங்கள்

ஒரு காலத்தில் ஸ்ரீரங்கத்திலும் மற்ற இடங்களிலும், எம்பெருமானார் நியமித்த எழுபத்து நான்கு ஸிம்ஹாஸநாதிபதி களின் ஸந்ததியார்கள் ஆசார்யர்களாக விளங்கி ஸ்ரீவைஷ்ண வத்தை ரக்ஷித்தார்கள். பிற்காலத்தில் அப்பரம்பரையில் சில மறைந்தே விட்டன. மணவாளமாமுனிகள், தம் திருவடிகளில் ஆச்ரயித்தவர்களில் எட்டு பேரைத் தேர்ந்தெடுத்து அஷ்டதிக் கஜாசாரியர்களாக நியமித்தார். இவர்கள் மணவாளமாமுனி

களிடம் அத்யந்த பக்தியுள்ள மகான்கள். 1. வானமாமலை ராமாநுஜஜீயர், 2. பரவஸ்துபட்டர்பிரான்ஜீயர், 3. திருவேங்கட ராமாநுஜஜீயர், 4. கோயில் கந்தாடை அண்ணன், 5. எறும்பி அப்பா, 6. பிரதிவாதிபயங்கரம் அண்ணா, 7. அப்பிள்ளை 8. அப்பிள்ளார்-அஷ்டதிக்கஜாசாரியர்களாவர். மணவாள மாமுனிகளின் ஆசார்யபரம்பரை:

திருவருள்மால் சேனைமுதலி சடகோபன் நாதமுனி
சீருய்யக் கொண்டார் மணக்கால் நம்பி சென்றாமாளவந்தார்
குருமாலாதார் குருகைப் பிரார்க்கன்பராம் எதிராசர்
கோவிந்தர் கூரேசர் பட்டர் வேதாந்திமுநி

இரு கண்ணர்க் கன்புடைய நம்பிள்ளை இவரீடளித்தற்
கேய்ந்த மாதவர் பற்பநாபரிவ ரருளாளர்
திருவடியூன்றிய தேவப் பெருமாள் கைக்கொண்டருளும்
திருமலையாழ்வார் பதங்கள் முன்பு என்னுட் சேர்ந்தனவே.

—(மணவாள மாமுனிகள் அருளியது)

பெரிய பெருமாள், பெரிய பிராட்டியார், சேனை முதலிகள், நம்மாழ்வார், நாதமுநிகள், உய்யக் கொண்டார், மணக்கால் நம்பி, ஆளவந்தார், திருமாலையாண்டான், எம்பெருமானார் (திருக் குருகைப்பிரான் பிள்ளான்) (எம்பார்—கூரத்தாழ்வான்)—பட்டர், நஞ்சீயர் நம்பிள்ளை—(பெரியவாச்சான்பிள்ளை—வடக்குத் திருவீதிப் பிள்ளை)—சிறியாழ்வான் அப்பிள்ளை என்கிற ஈயுண்ணி மாதவப் பெருமாள்—பத்மநாபர்—கோலவராஹப் பெருமான் என்ற நாலூர்ப் பிள்ளை—நாலூராச்சான் பிள்ளை. இவரே திருவாய் மொழிப் பிள்ளைக்கும், திருநாராயண புரம் 'ஆய்' என்ற ஜநந்யாசாரியருக்கும் ஈடு ஸாதித்தார். மணவாள மாமுனிகளுக்கு ஸ்ரீ பாஷ்யம் காலக்ஷேபம் ஸாதித்தவர் கிடாம்பி நாயனார். இவர் ராமாநுஜரின் திருவடிகளை ஆச்ரயித்த கிடாம்பியாச்சான் வம்சத்தவர்.

திருவருள்மால்—சேனைமுதலிகள்—சடகோபன்—நாதமுனிகள்—உய்யக் கொண்டார்—மணக்கால் நம்பி—ஆளவந்தார்—திருமாலையாண்டான்—எம்பெருமானார்—ஆழ்வான் எம்பார்—பட்டர்—நஞ்சீயர் — நம்பிள்ளை — பெரியவாச்சான்பிள்ளை—வடக்குத் திருவீதிப்பிள்ளை—பிறியாழ்வானப்பிள்ளை—திருமலையாழ்வார்—மணவாளமாமுனிகள் என்ற பரம்பரை. திருவாய்மொழியைக் காத்த குணவாளர் பரம்பரை. மணவாளமாமுனிகளின் திருவருளால் பிறபட்ட ஆசாரியர்களுக்கும் சிஷ்யர்களுக்கும், நம்போன்றாருக்கும் சுட்டின் விசேஷார்த்தங்கள் கிடைத்துள்ளன.

## நாம் எப்போதும் விரும்ப வேண்டியது

சிறிதும் கர்வம் இல்லாதவர்களும், 'ஆசார்யாபிமானமே உத்தாரகம்' என்று சரமோபாயத்தில் ஊன்றி நிற்பவர்களும், சாஸ்திரங்களில் ஸாரப் பொருளாகவும், ஸாரதமமாகவும் இருக்கும் அர்த்தங்களை அறிந்து அநுஷ்டானத்தில் கைக்கொண்டவர்களும், அர்த்தம் (பொருள்) விஷய சுகம் ஆகியவற்றில் சிறிதும் விருப்பமில்லாதவர்களும், எவர் மீதும் விருப்பு வெறுப்பு இல்லாமல் 'எல்லோரும் இனிதே சுகமாக வாழ வேண்டும்' என்று நினைப்பவர்களும், கோபத்தை வென்றவர்களும், கீழ்த்தரமான எண்ணங்கள் இல்லாதவர்களும் மணவாளமாமுனிகளின் அடியார்கள். அப்படிப்பட்டவர்களோடு நம் எப்போதும் சேர்ந்து வாழ்வதையே விரும்ப வேண்டும். நல்லவர்களின் சேர்க்கையே நன்மை தரும்.

## நெஞ்சே நினைத்திடாய் நீ என்றும்

மணவாளமாமுனிகளை ஸர்வதேச ஸர்வகாலத்திலும் சிந்தித்திருப்போர்க்கு, ஒருவராலும் போக்க முடியாத பாவங்களாக இருந்தாலும் அவை நீங்கும்; பந்த பாசங்கள் விலகும். ஆசை, கோபம், குற்றங்கள், கோடி சன்மத்தாபங்கள் பற்று அறும், தண்ணரங்கன் புகழே வடிவமான சாத்த (ஸத்வ) குணநிபனாகிய கருணை மணவாள யோகியைச் சிந்திப்பார்க்கு எல்லா நன்மைகளும் ஏற்படும்.

பாவங்கள் பற்றறும், பாசங்கள் பற்றறும் பற்றி-வைகும்
கோவங்கள் பற்றறும் குற்றங்கள் பற்றறும் கோடிசன்மத்
தாவங்கள் பற்றறும் தண்ணரங்கன்புகழ் சாந்தகுண
தீவன் கருணை மணவாள யோகியைச் சிந்திக்கவே.

—மணவாளமாமுனிகள் 'கண்ணிநுண் சிறுத்தாம்பு'

## சடகோபன் தண்டமிழ் நூல் வாழ்க

மணவாள மாமுனிகள், திருவாய்மொழியில் அமிழ்ந்திருந்த பொன்னும் முத்தும் பவழமுமான ஆழ்பொருள்களை எல்லாம் வெளியில் எடுத்து நம்போல்வாருக்குக் கொடுத்தருளினார் எல்லார்க்கும் எல்லாம் கொடுக்கும்அரங்கனுக்கே திருவாய்மொழிப் பொருள்களை காலக்ஷேபம் ஸாதித்து அருளினார். மணவாள மாமுனிகள் அவதரிக்கவில்லையானால் இத்தனை அரும் பொருள்களைக் கொண்ட திருவாய்மொழியாகிற தமிழ்வேதம் ஒருவர்க்கும் பயன்படாமல் ஆற்றில் கரைத்த புளிபோல் வீணாகி இருக்கும்!

சேற்றுக்கமல வயல் சூழ் அரங்கர் தம் சீர்தழைப்பப்
போற்றித்தொழும் நல்லவந்தணர் வாழ இப்பூதலத்தே
மாற்றற்ற செம்பொன் மணவாளமாமுனி வந்திலனேல்
ஆற்றில் கரைத்த புளியல்லவோ தமிழாரணமே.

— 'சம்பிரதாய சந்திரிகை.'

## எராரும் எதிராசரென உதித்தான் வாழியே!

மணவாள்மாமுனிகள் அருளிச் செய்த ஆர்த்திப் பிரபந்தம் முழுவதும் எம்பெருமானாரின் பெருமையைக் கூறுபவை. எம்பெருமானாரின் (ராமாநுஜரின்) கருணையே நம்மை ரக்ஷிக்கும். அவர் கிருபாமாத்ர ப்ரஸந்நாசாரியர். எதிராசன் சேவடிமேல் பரமபக்தி தலையெடுத்து, 'பரமாபதமாபந்ந:' என்று சொல்லத்தக்க

பரமார்த்தியை அடைந்து அருளிச் செய்த பாசுரங்கள் அடங்கிய தால் 'ஆர்த்திப் பிரபந்தம்' என்று பெயர். இப்பிரபந்தத்தைத் தொடங்கும்போதே 'வாழி எதிராசன் வாழி எதிராசன்' என்று எம்பெருமானாரை (ராமாநுஜரை) மணவாளமாமுநிகள் மங்களா சாஸனம் செய்கிறார் அதுமட்டுமல்ல. ராமாநுஜருக்குப் பல்லாண்டு பாடுவோரையும் வாழ்த்துகிறார். இதற்குப் பிள்ளைலோகம் ஜீயர் எழுதிய அவதாரிகையைக் காண்மின்.

தம் ஆர்த்தியை எம்பெருமானாரிடம் விண்ணப்பிக்கத் தொடங்கிய இவர். தண்டகாரணிய வாஸிகளான ரிஷிகள் 'ஏஹி 'பச்ய சரீராணி' என்று ராக்ஷஸர்களாலும் ராவணனாலும் நலிவு பட்ட தேஹங்களைப் பெருமாளுக்குக் காட்டி ரக்ஷணம் பெறு வதற்கு முன்னம், அத்தலையில் ஸௌந்தர்ய ஸௌகுமார்யாதி களில் ஈடுபட்டு 'மங்களாநி ப்ரயுஞ்ஜாநா:' என்று மங்களாசாஸனம் பண்ணினாப்போலே, இவரும் தம்மை விஷயீகரிக்க விண்ணின் தலைநின்றும் எழுந்தருளின எம்பெருமானாருடைய அப்ராக்ருத திவ்யமங்கள விக்ரஹத்தில் பிரகாசிக்கும் ஸௌந்தர்ய ஸௌகு மார்யாதிகளைக் கண்டுகலங்கி. ப்ரக்ருதி நின்றஆத்மாவைக் காட்டி. தாம் விரும்பியதை எல்லாம் அறிவிப்பதற்கு முன்னம் மங்களா சாஸனம் பண்ணுகிறார். இந்த மங்காளாசாஸனமும்,

**ஜயத்யதிபலோராம ; லக்ஷ்மணச்ச மஹாபல : |**
**ராஜாஜயதி ஸுக்ரீவோ, ராகவேணாபிபாலித : ||**

என்றதில் போல் 'ஸம்பந்த ஸம்பத்தி'களாவும் சென்றது என்பதாம்.

இதன் பொருள் : ராமன் வன வாசத்தின் போது தண்டகா ரண்ய மகரிஷிகள் இருப்பிடம் சென்றான் இவன்வந்திருப் பதை அறிந்த ரிஷிகள், ராக்ஷஸர்களாலும் ராவணனாலும் துன்புறுத்தப்பட்ட நம் சரீரங்களைக் காண்பித்து. எங்களைக் காப்பாற்ற வேண்டும் என்று கேட்க விரும்பினாரகள்; ஆனால்

ராமனைக் கண்டவுடன் அவனுடைய அழகில் ஈடுபட்டு அவனுக்கு (அவனுடைய க்ஷேமத்தைக் கருதி) மங்களாசாஸனம் செய்யத் தொடங்கி விட்டார்கள், ராமனுக்கு மங்களாசாஸனம் செய்யத் தொடங்கினவர்கள் லக்ஷ்மணனுக்கும், ஸுக்ரீவனுக்கும் கூட மங்களாசாஸனம் செய்கிறார்கள். அதுபோல் எம்பெருமானார் தம்மை ஏற்றுக் கொள்ள எதிரில் வந்து நின்றது போல் ஒரு எண்ணம். அவரிடம் இந்தப்ரக்ருதி துன்புறுத்தி இருக்கும் ஆத்மாவைக்காட்டி தாம் விரும்பியதை எல்லாம் கூறநினைத்த மணவாள மாமுனிகள் அவருடைய அழகிலும் குணங்களிலும் மனத்தைப் பறிகொடுத்து அவரையும், அவருக்கு எப்போதும் மங்களாசாஸனம் செய்யும் ராமாநுசனடியார்களான, ஸ்ரீவைஷ்ணவர்களையும் மங்களாசாஸனம் செய்கிறார் என்பதாகும்.

வாழியெதிராசன் வாழியெதிராசன்
வாழியெதிராசனெனவாழ்த்துவார் —வாழியென
வாழ்த்துவார் வாழியெனவாழ்த்துவார் தாளிணையில்
தாழ்த்துவார் விண்ணோர் தலை.

—ஆர்த்திப் பிரபந்தம்.

## எட்டினோடு இரண்டு

பகவானுடைய அடியார்கள் எல்லாவற்றையும் கொடுக்கும் நலம் தரும் சொல்லாகிய திருமந்திரத்தை (ஓம் நமோ நாராயணாய) எப்போதும் சொல்லிக் கொண்டே இருப்பார்கள். பகவான் மோக்ஷத்தை அளிக்க வல்லவன். ராமாநுஜருக்கு எல்லா ஐச்வர்யங்களையும் அளித்த நம் பெருமான் மோக்ஷம் அளிக்கும் அதிகாரத்தையும் அளித்தார். அப்படிப்பட்ட ராமாநுஜரை ஆச்ரயித்த அடியார்கள் 'தேவுமற்றறியேன்' என்ற நிலையில் இருந்து கொண்டு 'ஸ்ரீமதே ராமாநுஜாய நம:' என்று பத்து எழுத்துக்களையும் பற்றுடன் கூறுவார்கள். பகவத் கடாக்ஷம் பந்தம் மோக்ஷம் ஆகிய இரண்டுக்கும் காரணமாக இருக்கும்; ஆசார்ய கடாக்ஷம் மோக்ஷத்தையே கொடுக்கும் ஆதலால் 'ஸ்ரீமதே ராமாநுஜாய நம:' என்றே சொல்லிக்கொண்டு

இருக்க வேண்டும். அப்படி நாம் சொல்லாவிட்டாலும், அவ்வாறு சொல்லுகிறவர்களோடு சிந்திப்பவர்களோடு ஸஹவாஸம் செய்ய வேண்டும்; சேர்ந்து வாழ வேண்டும். இதையே திருவரங்கத் தமுதனார் 'ராமானுசனைத் தொழும் பெரியோர் எழுந்திரைத் தாடுமிடம் அடியேனுக்கு இருப்பிடமே' என்றார். நமக்கு எல்லாவற்றையும் அளித்து வாழ்விக்க வல்லவர் ஆசார்ய ஸார்வ பௌமரான ராமானுஜர் ஒருவரே என்ற நம்பிக்கை கொண்டவர்கள் விண்ணோர்களைக் காட்டிலும் மேம்பட்டவர்கள் என்பது மணவாள மாமுனிகளின் திருவுள்ளமாகும்.

இராமானுசாய நமவென்று சிந்தித்
திராமானுசரோ டிறைப்போழ் - திராமானு
சிந்திப்பார் தாளிணையிற் சேர்ந்திருப்பார் தாளிணையை
வந்திப்பார் விண்ணோர்கள் வாழ்வு.

—ஆர்த்திப் பிரபந்தம் - 2

## அவதரிக்க வேண்டுமா?

பகவான் வேறு; ஆசாரியன் வேறு இல்லை; பகவானே ஆசாரியன். பகவானின் அவதாரம் போன்றதே ஆசார்ய அவதாரமும். நாமும் பிறக்கிறோம்; அவர்களும் பிறக்கிறார்கள் நாம் வினைப்பயனாக பல பிறப்புகளுக்கு ஆளாகிறோம். கர்மம் அடியாகப் பிறக்கிறோம். கிருபையின் காரணமாக அவர்கள் பிறக்கிறார்கள். ஆசாரியர் நடமாடும் தெய்வம். அவர்களும் இந்த ஸம்ஸாரத்திலே வந்து தோன்றி நம்மோடு பழகினாலும் இவ்வுலகச் சூழ்நிலையால் ஏற்படும் குற்றங்கள் தோஷங்கள் அவர்களை ஒட்டாது. நாம் பிறக்கும் போதெல்லாம் நம்மை உஜ்ஜீவிக்கும்படி செய்ய அவர்களும் பிறக்கத் தானே வேண்டும். தன் குழந்தை கிணற்றில் விழுந்து விட்டால், (அதைப் பெற்றெடுத்துப் பாசத்தைக் காட்டும்) தாய் அதைப் பார்த்துக் கொண்டிருப்பாளா? அதைக் காப்பாற்றியே தீரவேண்டும் என்று நினைப்பாள். கிணற்றின் கரையில் இருந்து கொண்டு 'வா' என்று அழைத்தாலோ, கையை நீட்டினாலோ உயிருக்குப் போராடும்

அக்குழந்தை கரையேறி வந்து விடுமா என்ன? ஆதலால் தாயும் தன் நன்மையைக் கருதாமல், தன் உயிரைப் பொருட்படுத்தாமல் கிணற்றில் குதித்துத் தன் குழந்தையைக் காப்பாற்றுவாள். குழந்தை தான் விழுந்ததே! தாயும் குதிக்க வேண்டுமா? என்று கேட்பார் உண்டோ? அதுபோல் இப்பிறவிக் கடலில் விழுந்த, விழுகின்ற, விழப்போகிறவர்களைக் காப்பாற்றுவதற்காகவே எம்பெருமானார் பூமியில் அவதரித்தார். மாதாவைப் போல் அவர் வாத்ஸல்ய குணமுடையவர் என்கிறார் மணவாள மாமுனிகள்.

கூபத்தில் வீழும் குழவியுடன் குதித்துஅவ்
வாபத்தை நீக்குமந்த வன்னைபோல்—பாபத்தால்
யான் பிறப்பேனேலும் இனியெந்தை யெதிராசன்
தான் பிறக்குமென்னை யுய்ப்பதா.

—ஆர்த்திப் பிரபந்தம் - 9

## ஏழைக்கு இரங்காய் இனி

வால்மீகி முனிவர், 'க்ஷமயா ப்ருதிவீ ஸம:'—ராமன் பொறுமையில் பூமியைப் போன்றவன் என்கிறார். பொறுமையே வடிவமானவர்கள் ஆசாரியர்கள். எம்பெருமானார் பொறுமையே வடிவமானவர். பொறுத்துக் கொள்ளும் மனப்பாங்கு ஆசாரியர் களுக்கு உண்டு. உபதேசத்தினால் ஞானத்தை ஏற்படுத்தி ஒருவரைத் திருத்திப் பணிகொள்வது அத்தனை எளிய செயலன்று. கிருபையின் காரணமாகவே அவர்கள் பொறுமையோடு இருக்கிறார் கள். பகவான் நமக்குத் திரிகரணங்களைக் கொடுத்திருக்கிறான். எண்ணம், சொல், செயல் மூன்றையும் தன்னிடம் பயன்படுத்தி நன்மை பெறட்டும் என்று நினைக்கிறான். ஆனால் ஒவ்வொரு வனும் அவற்றைக் கொண்டு அபசாரங்களைச் செய்து மேன்மேலும் பாவத்தையே சேர்த்துக் கொள்கிறான். பகவதபசாரம் பாகவத அபசாரம் ஆகியவற்றைச் செய்கிறான். பகவானைப் பற்றியும் அடியார்களைப் பற்றியும் கெட்ட எண்ணங்களையே நினைக் கிறான்; மனத்தைப் புண்படுத்தும் வார்த்தைகளையே சொல் கிறான்; கேடு விளைவிக்கும் செயல்களையே செய்கிறான்.

ஏன் இவ்வாறு செய்ய வேண்டும். செய்யாமல் இருக்கலாகாதா? என்பர் பலர். 'ஸ்வபாவோ துரதிக்ரம :'— ஸ்வபாவத்தை மாற்றவே முடியாது என்பதே முன்னோர்களின் விடை. பெரியோர்கள் எத்தனை உத்தம குணங்களைக் கொண்டவர்களாக இருந்தாலும் தங்களைத் தாழ்த்தியே பேசிக் கொள்வார்கள். யாமுநாசாரியர் எனப்படுகிற ஆளவந்தார் என்ற ஆசாரியரும் தான் அருளிய ஸ்தோத்ர ரத்தினத்தில் 'நநிந்திதம் கர்ம ததஸ்தி லோகே. ஸஹஸ்ரசோ யந்நமயா வ்யதாயி' என்கிறார். "நிந்தனைக்குரிய செயல் ஒவ்வொன்றையும் ஆயிரம் முறை செய்திருக்கிறேன். என்னால் செய்யப்படாத 'நிந்தனைக்குரிய செயலே' இல்லை என்கிறார். அதுபோல் மணவாள மாமுனிகளும் தன்னுடைய தாழ்ச்சியைக் கூறிக்கொண்டு எம்பெருமானாருடைய பெருந்தன்மையை வெளிப்படுத்துகிறார். நான் பிழை செய்து கொண்டே இருக்கிறேன். மேன்மேலும் பிழை செய்து கொண்டே இருப்பேன். இது என் ஸ்வபாவம். பொறுத்துக் கொள்வது உன் கடமை. தேவரீரைப் போல் பொறுத்துக் கொள்கிறவர் எவரும் இல்லை. 'உலகில் எல்லோராலும் செய்யப்படும் எல்லா வகையான அபசாரங்களையும் பொறுத்துக் கொள்ள வேண்டும்'' என்று நம் பெருமானிடம் பிரார்த்திக்கவில்லையா?

எனைப்போல் பிழைசெய்வார் இல்வுலகிலுண்டோ?
உனைப்போல் பொறுக்க வல்லாருண்டோ—அனைத்துலகும்
வாழப்பிறந்த எதிராச மாமுனிவா
ஏழைக் கிரங்காய் இனி.

—ஆர்த்திப் பிரபந்தம் - 41

உலகனைத்தும் வாழ்விக்க வந்த மாமுனிவா!
உனக்கு ஓராயிரம் பல்லாண்டு!

